# பொதுத் தமிழ்

## அலகு - 3

1. சங்க முனி எதற்காக தவம் மேற்கொண்டார்?
    - சங்க முனிவரென்னும் தவ முனிவர், உலக சுகத்திலே உள்ள போட்டி பொறாமையைக் கண்டு ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்பதாய்க் கொண்டு புலனடக்கி பன்னிரண்டாண்டுகள் தனிமையில் தவமிருக்கச் சென்றார்.
    - சீர்த்த மலை என்னும் இடத்தில் தவமிருப்பதற்கான இடத்தை தெரிவு செய்தார். சீடர்களிடம் நான் தவவேள்வியைத் தொடங்குகிறேன்.
    - மாமாங்கம் முடிந்த பின்பு மீண்டும் சந்திக்கிறேன் என்று கூறி தவம் மேற்கொண்டார்.
2. தேவந்திகை கேட்ட வரம் யாது?
    - சீர்த்த மலையின் அருகில் வசிப்பவள். துங்க முனிவரின் முனிபத்தினி தேவந்திகை ஆவாள்.
    - இவள் இகலோக உணர்ச்சிகள் மரத்துப் போகும்படி வாழ்ந்த தன் கணவர் துங்க முனிவரால் தன் வாழ்க்கை நொந்து போவதாக எண்ணினாள்.
    - தனக்கொரு புத்திர பாக்கியம் கிடைக்காதா என்னும் தேடலில் பிள்ளை வரம் வேண்டி பேராச்சி கோயிலுக்குச் சென்றாள்.
    - அங்கு பூசாரியிடம், கணவரிடம் முனிவர் என் கண்ணீரைத் துடைக்க வேணும். கை நிறையப் பிள்ளைகள் நிறையத் தர வேணும் என வரங் கேட்டாள்.
3. தவம் முடிந்த குருவிற்கு சீடர்கள் கொடுத்த காணிக்கை யாது?
    - 12 ஆண்டுகள் கடுமையான தவம் முடிந்து கண் விழிக்க இருக்கிற தங்கள் குருநாதருக்காக சீடர்கள் தர்ப்பைப் புற்களும், கள்ளிகளும், மலர்களும் பறித்தனர். ஓம குண்டத்தை தயார் செய்தனர்.
    - உணவைத் துறந்து ஊனைச் சுருக்கி நிற்கும் மா முனிவர் தவம் முடிக்க விரைவில் கனிகள் கொண்டுவரச் சென்றனர்.
    - அப்போது தேவந்திகை என்னும் முனிபத்தினி தனக்கு வரமாக கிடைத்த கனியை மரத்தினடியில் வைத்துவிட்டு நீடாடச் சென்றாள்.
    - சங்க முனியின் சீடர்கள் அக்கனியைக் கண்டதும் அதிசயம் குருநாதருக்குக்கென்று தெய்வம் தந்திருக்கும் திரு உணவு என எண்ணினர். இக் கனியையே மாமுனிவருக்கு காணிக்கையாக அருளினர்.
4. சங்க முனி சீடர்களுக்கு அருளிய அறிவுரை யாது?
    - தவம் முடிந்து எழுந்த குருவிடம் சீடர்கள் ஞான மார்க்கம் அடைய வழிகேட்டனர்.
    - சங்க முனிவர், 'சிந்தையை ஒன்றினில் அடக்கி அந்த ஞானவெளியில் நாம் கலந்து மோனத்திருக்கும் தவம் உன்னதமானது. இம் மேன்மை ஞானிகளால் மட்டுமே அடையக் கூடியது.
    - இது நீங்கிய சாதாரண வாழ்க்கை பன்றி தொழுவத்திற்கு ஒப்பானது. நான் பன்றிகள் அல்ல, ஞானிகள்! மனவொளியில் பேரருளைப் பூஜிக்கும் தவமே நம்மை ஞானிகளாக்கும் என சீடர்களுக்கு அறிவுரை கூறினார்.

5. <u>கனியை உண்ட சங்கமுனி அடைந்த மாற்றம் யாது?</u>

- சங்க முனி சீடர்கள் கொடுத்த அக்கனியை உண்ட பின் மெல்ல மெல்ல அவர் நினைவில் இருந்து மாறுகிறார்.
- 'ஆசை பெறுமின் ஆசை பெறுமின் ஆசையில் எல்லாம் அமிழ்ந்தே திளைத்திடுங்கள். பெண்ணாசை பெறுமின். பேரின்பம் என்னும் பெருவெளியை பெண்ணிடமே பெறுமின் எனச் சீடர்களிடம் கூறுகிறார்.
- சீடர்கள் முனிவரின் மாற்றம் கண்டு திகைத்தனர். மேலும் சங்க முனி சிற்றின்பமே பேரின்பம். பேரின்பமே சிற்றின்பம், இப் பேரின்பம் தருபவர் பெண்ணே எனக் கூறி தேவந்திகை எனும் முனி பத்தினியை பின் தொடர்ந்து செல்கிறார். இவ்வாறு சங்கமுனி தன் நிலையில் மாற்றம் கொள்கிறார்.

6. <u>துங்க முனி சங்க முனிக்கு கொடுத்த சாபம் யாது?</u>

- தெய்வக் கனியை உண்ட சங்க முனி தன் சிற்றின்ப மேலீட்டால் தேவந்திகையை பின் தொடர்ந்து செல்ல நேரிட்டது.
- முனி பத்தினி சங்க முனியின் இச்சையிலிருந்து தப்பித்து துங்க முனியிடம் சரண்டைகிறாள்.
- அப்போது துங்கமுனி, சங்க முனியின் தாபத்தை அறிந்து அவரை மறித்தார். பின்பு கோபமாக தவவேடம் பூண்ட பதரே.
- இச்சை கொண்டு தவ வாழ்வில் சேறு பூசிய மூடனே, நாளை சூரியோதையத்தில் எல்லோரும் காணும்படி பன்றியாக நீ போகக் கடவாய்' என சாபம் இட்டார்.

7. <u>சங்கமுனி தயாபரனிடம் வேண்டுவது யாது?</u>

- சங்க முனி தான் சாபத்தால் பன்றியாவதை விரும்பவில்லை. எனவே தன் சீடனாகிய தயாபரனிடம் தன்னைக் கொன்றுவிடும்படி வேண்டுகிறார்.
- தயாபரா, நாளை சூரியோதயத்தில் நான் பன்றி ஆவதற்குள் பற்றின்றி மனப்பரிவின்றி என் கழுத்தை வெட்டி ஏறிய வேண்டுகிறேன் என்றார்.
- மாமேருவாய் வளர்ந்து இனி மடுவில் கிடப்பேனோ? ஈனப் பன்றியால் உயிர் தரித்து திரிவேனோ? என் மனத்தின் நோவு உனக்கு புரியாமல் போனதே.
- தயாபரா நீ குருவின் ஆணையை ஏற்று என்னைக் கொல்லுவாய் என வேண்டுகிறார்.

8. <u>பன்றி முனி மீண்டும் முனிவராக மாறாதது ஏன்?</u>

- சாபத்தால் பன்றியாய் வாழ்ந்து வந்த முனியை சீடர்கள் பவுர்ணமியன்று சாப மோட்சம் தர எண்ணி குருவிடம் பேசுகின்றனர்.
- அப்போது பன்றி முனி சந்தன சகதிக்குள் பெண்டு பெடைகளுடன் வாழும் சுகம் எனக்கு பிடித்து விட்டது.
- என்னை விட்டுச் செல்லுங்கள் எனக் கூறினார். சீடர்கள், நாங்கள் மனத்தின் தோட்டிகள் எனக்கூற பன்றி முனி அதனால் தான் சாபங்கள் இடுகிறீர்கள். நாங்கள் வரங்களும் தருகிறோம் எனச் சீடர்கள் கூறினர்.
- உங்கள் சாபங்களே எங்களுக்கு வரங்களாக இருக்கையில் உங்கள் வரங்கள் எங்களுக்கு தேவை யில்லை எனக் கூறி மீண்டும் முனிவராய் மாற முடியாது என விலகிச் சென்றார்.

9. <u>வண்ணதாசன் - சிறு குறிப்பு வரைக.</u>

- வண்ணதாசனின் இயற்பெயர் சி.கல்யாண சுந்தரம். இவர் திருநெல்வேலியில் பிறந்தவர்.
- தமிழறிஞரும் சாகித்ய அகாதெமி விருதும் பெற்ற தி.க. சிவசங்கரனின் மகனாவார்.
- நவீன தமிழ்ச் சிறுகதை உலகில் மிகுந்த கவனம் பெற்ற எழுத்தாளராக விளங்குபவர்.
- 1962 - ஆம் ஆண்டில் இருந்து இன்று வரை தொடர்ந்து சிறுகதைகள் எழுதி வருகிறார்.
- ஒரு சிறு இசை என்ற சிறுகதை நூலுக்காக சாகித்ய அகாதெமி விருது பெற்றவர். 2016 - இல் விஷ்ணுபுரம் விருது இவருக்கு வழங்கப்பட்டது.

10. <u>மூக்கம்மா ஆச்சியின் கதை சொல்லும் பாங்கினைக் கூறுக.</u>

- மூக்கம்மா ஆச்சிக்கு கதை சொல்லுவது மிகவும் பிடிக்கும். இருட்டுக்கும் அவளுடைய கதைகளுக்கும் ஒரு நெருக்கம் இருந்து கொண்டே இருக்கும். பகலில் அவள் கதை சொன்னதே இல்லை.
- சாயுங்காலம் அவளைக் கதை சொல்லச் சொன்னால் கருகருத்த நேரத்தில் கதை சொல்லக் கூடாது 'ராட்ஸசன் பிடிப்பான் எனக் கூறுவார். அவளிடம் ராஜா கதைகள் பல உண்டு.
- எந்நேரமும் அவர்கள் குதிரையில் வேட்டையாடிக் கொண்டிருப்பார்கள். ராஜாக்கள் ஏழு பெண்ணை திருமணம் செய்து கொண்டனர்.
- என தன் கற்பனைக் கேற்ப புராணக் கதைகளையும் ராஜா கதையினையும் இணைத்து கதை சொல்லும் பாங்கு ரசிக்க தக்கதாய் இருக்கும்.

11. <u>ஆச்சி தன் பற்கள் முழுவதும் இல்லாமற் போனதற்கு கூறும் கதை யாது?</u>

- ஒரு நாள் இரவு ஆடிச் செவ்வாய் அவ்வையார் விரதக் கொழுகட்டை கொடுக்கக் கூடாதேன்னு யானையிடம் பொய் கூறினாள்.
- கொழுக்கட்டை எல்லாம் தீர்ந்து போய்விட்டது என சத்தியம் செய்தாள். யானையும் சத்தியத்துக்கு கட்டுப்பட்டு திரும்பி சென்று விட்டது.
- மறுநாள் காலையில் எழுந்திருச்சு பார்த்தா ஒரு பல்லு கூட இல்லை எல்லாம் உதிர்ந்து விட்டது.
- ஆணைகிட்ட பொய் சொன்ன தால் தான் தன் பல் எல்லாம் விழுந்து விட்டதாக கதை கூறினால் பாட்டி.

12. <u>மூக்கம்மாள் ஆச்சி செய்யும் வேலைகள் சிலவற்றை கூறு.</u>

- பத்து மரக்கா பச்சரியையும் ஒரே ஆளாக இடித்து வைப்பாள். எத்தனை கோட்டை நெல்லையும் ஒரு ஆளாக வெந்து தட்டுவாள்.
- ஊரில் இருந்து கொண்டு வந்த காணத்தை மண்சட்டியில் மணம் வரும் வரை வறுத்து வைப்பாள்.
- பரணில் இருக்கும் வெங்கலப் பாத்திரங்களை எல்லாம் வாய்க்காலுக்குக் கொண்டுபோய் விளக்கி எடுத்து வெயிலில் வைப்பாள்.
- புளிச் சிப்பத்தை ஓலைப்பாயில் காய வைத்து கொட்டை எடுப்பாள். இவ்வாறு மூக்கம்மா ஆச்சி ஓயாது வேலைகள் பார்த்துக் கொண்டே இருப்பாள்.

13. <u>மூக்கம்மாள் ஆச்சியின் பெட்டியில் என்னென்ன பொருட்கள் இருந்தன?</u>

**மூக்கம்மா ஆச்சி இறந்த பிறகு அவளது மரப்பெட்டியை திறந்தனர். அப்பெட்டி வழவழப்பு நிறைந்த மரப்பெட்டியாகும். இரண்டு தட்டுகளாக வெளியே எடுத்து வைக்கும் படியான தடுப்புப் பலகைகள் கொண்டதாய் இருந்தன. அதனுள் சிறு சிறு புத்தகங்கள் சொத்து பத்திரங்கள், காலாவதியான ஒரு நூற்பாலையின் பங்கு பத்திரங்கள், சில பட்டுச் சேலைகள், ஒரு பட்டு நேரியல், ஸ்படிகமணி மாலையும் இருந்தன. எல்லாவற்றிற்கும் கீழ் தனித்தனியாக இரண்டு மூன்று மஞ்சள் பைகள் இருந்தது. அவற்றில் ஒன்றில் ஆச்சியின் புகைப்படம் இருந்தது. அந்தப் படம் சிவப்பு உல்லன் நூலால் கோர்க்கப்பட்ட மூன்று தங்க பித்தான்கள் உள்ள தாத்தாவின் வட்டக் கழுத்து சந்தனக் கலர் சட்டையின் மேல் இருந்தது.**

14. <u>பன்னிரண்டு ஆண்டுகள் தவம் புரிந்த சங்கமுனி சீடர்களுக்கு வழங்கிய அறிவுரை யாது?</u>

**சீர்த்த மலை என்னும் இடத்தில் சங்க முனி என்பவர் தன் சீடர்கள் புடை சூழ தவம் புரிய இடத்தை தேடுகின்றனர். அப்போது சுகந்த மணம் வீசும் சோலையை தவம் புரிய ஏற்ற இடமாக தேர்வு செய்கின்றனர். குருவான சங்கமுனியும் 12 ஆண்டுகள் கடுந்தவம் புரிகின்றார்.**

***<u>சீடர்களின் தொண்டு</u>***

- **12 ஆண்டுகள் கடுமையான தவம் முடிந்து கண் விழிக்க இருக்கின்ற குருநாதருக்காக சீடர்கள் தர்ப்பைப் புற்கள், கள்ளிகள், மலர்கள் பறிக்கின்றனர். ஓமகுண்டத்தை தயார் படுத்தி வைக்கின்றனர்.**

***<u>முனிவர் கண்திறத்தல்</u>***

- **மாமுனிவர் கண் திறந்தால் மாணவர்களாகிய சீடர்கள் உயரடைவார்கள். பன்னிரண்டாண்டுகளாய்ப் பக்தியின் ஒளிப் பெருக்கில் மூழ்கிப் திளைந்து தனிமையில் வேத நெறிப்படி யோக நெறி நின்றார் முனிவர்.**
- **சங்க முனி தவம் முடிந்து கண் திறக்கின்றார். தவத்தின் சாரத்தை என் ஞானத்தை உங்களுக்கு பகிர்ந்தளிப்பேன் என்கிறார்.**

***<u>முனிவர்களின் அறிவுரை</u>***

- **சீடர்கள் அறிவுரை வழங்குமாறு கேட்க, முனிவரும் எழுந்து நின்று, சிந்தையை ஒன்றினில் அடக்கி, அந்த ஞானவெளியில் நாம் கலந்திருக்கும் தவம் உன்னதமானது. ஞானிகளால் மட்டுமே அடையக் கூடியது.**
- **இது நீங்கிய சாதாரண வாழ்க்கை பன்றித் தொழுவத்திற்கு ஒப்பானது. நாம் பன்றிகள் அல்ல, ஞானிகள்! மனவொளியில் பேரருளைப் பூஜிக்கும் தவமே நம்மை ஞானிகளாகக் காட்டும் எனச் சங்கமுனி தவம் கலைந்து அருளுரை வழங்கினார்.**

15. <u>சங்குமுனிக்கு துங்க முனி ஏன் பன்றியாக மாறும் சாபம் கொடுத்தார்?</u>

**தவம் முடிந்து எழுந்த சங்க முனிக்கு அவரின் சீடர்கள் உண்பதற்கு கனி ஒன்றை கொடுத்தனர். அக்கனியை உண்டதும் சங்க முனி சிறிது சிறிதாக மாறுகின்றார்.**

***<u>கனியின் வரலாறு</u>***

**துங்க முனியின் பத்தினி தேவந்திகை தன் கணவன் மேல் கொண்ட சிற்றின்ப ஆசையில் கோயில் பூசாரியிடம் வேண்டி ஒரு கனியைப் பெறுகிறாள். தனக்கு பிள்ளை வரம் வேண்டி அக்கனியை வரமாகப் பெற்று விட்டாள். ஆற்றில் குளிக்கும் போது**

கரையில் அக்கனியை வைத்து விட்டு செல்கிறாள். இதை அறியாத சங்க முனியின் சீடர்கள் அக்கனியை தெய்வக்கனி என்றெண்ணி குருவிடம் உண்ணக் கொடுத்தனர்.

***சங்க முனியின் சிற்றின்பம்***

தெய்வக் கனியை உண்ட சங்க முனி சிற்றின்ப ஆசையால் பெண்ணே பேரின்பம் எனக் கூறி தேவந்திகையின் பின்னால் செல்கிறார். அப்போது தேவந்திகை நான் மாற்றான் மனைவி, மாமுனியின் பத்தினி. ஏதோ குழப்பம் நிகழ்ந்து விட்டது என அடைக்கலம் தேடி துங்க முனியிடம் செல்கிறாள்.

***துங்க முனியின் சாபம்***

தன் மனைவி மேல் தாபம் கொண்டு ஓடி வரும் சங்க முனியை தடுக்கிறார். கோபம் கொண்டு சங்க முனிக்கு, "தவவேடம் பூண்ட பதரே, கீழான இச்சை கொண்டு தவ வாழ்வில் சேறு பூசிய மூடனே நாளை சூரியோதத்தில் எல்லோரும் காணும்படி பன்றியாக நீ போகக் கடவாய்" எனச் சாபம் அளிக்கிறார்.

16. **சங்க முனி சாப விமோசனம் பெறாதது ஏன்?**

***சாப விமோசனம்***

- சங்க முனிவரின் சாபம் நீங்க சீடர்கள் துங்க முனியிடம் எங்களால் தான் இத்தவறு நேர்ந்தது, நாங்கள் கொடுத்த கனியை உண்ட பின்னே குரு நாதர் இவ்வாறு மாறினார் என குருபக்தி மேலிட பேசினர்.
- இதை அறிந்த துங்க முனியும் சாப விமோசனம் அளித்தார். இனி வரும் பௌர்ணமி நாளில் பன்றி உருவில் இருக்கும் உங்கள் குருவின் தலையை வெட்டினால் சாபம் நீங்கிவிடும். உங்கள் குரு சாப விமோசனம் பெறுவார் என்றார்.

***சங்க முனி பன்றியோடு வாழ்தல்***

- சங்க முனி பன்றியாய் மாறிவிட்ட பின் தன் சீடர் கூட்டத்திலிருந்து தப்பித்து பன்றிகளோடு சென்று விடுகிறார். மெது மெதுவாக பன்றி முனி எல்லாப் பன்றிகளைப் போலவே மாறி விடுகிறார்.

***சாப விமோசனம்***

- பௌர்ணமி நாளன்று பன்றி முனியைத் தேடி அலைகின்றனர் சீடர்கள். முடிவில் முனிவரை காண்கின்றனர்.
- அவரிடம் பேசி அவருக்கு சாப விமோசனம் அளிக்க, பன்றி முனியின் சிரத்தை வெட்ட பலி ஆட்டை அழைத்து வருவது போல் பூசைகள் செய்து அழைத்து வருகின்றனர்.
- வெட்ட வரும் சமயம் பன்றி முனி பன்றிகள் சப்தம் கேட்டு ஓடுகிறார். பன்றி உரு ஒழிந்து மீண்டும் குருவாகத் திரும்புவதாகக் கற்பனை செய்கிறார், குழம்புகிறார்.
- சீடன் தயாபரனைப் பார்த்து வெட்டுவதை நிறுத்து என்கிறார்.

***பன்றி முனியின் மாற்றம்***

- மற்ற பன்றிகள் சீடர்களைப் பார்த்து உங்கள் குருநாதர் உங்களிடம் வரமாட்டார் எனக் கூறுகின்றன. குருநாதரே நீங்கள் சொல்லுங்கள் எனக் கேட்டபோது பன்றிகள் பொய் சொல்லுவதில்லை.
- இப்பன்றி வாழ்க்கை தந்த சுகம் கொஞ்சமா? இந்த வகை வாழ்க்கை பிடித்த விதம் சொல்லவும் முடியாது எனக் கூறி பன்றிகளோடு செல்கிறார்.

*<u>சாபமே வரமாகிறது</u>*

- **உயர்ந்த ஸ்தானம் என்று தான் கருதுகின்ற இடத்திலிருந்து சந்தர்ப்ப வசத்தால் தன் கருத்தின் கீழான நிலைக்கு தள்ளப்பட்டாலும் தொடக்கத்தில் அதை ஏற்க மறுக்கிற மனசு பின் அதோடு சமரசம் செய்து கொண்டு அந்த இடத்தை சொர்க்கமாக நினைக்கின்றன.**
- **சங்க முனியும் தான் பெற்ற சாபத்தை வரமாக மாற்றிக் கொண்டதால் தான் சாப விமோசனத்தை அவர் ஏற்கவில்லை.**
- **சங்க முனிவர் பன்றி வாழ்க்கையுடன் சமரசமாகிப் பழகி கொண்டார்.**

**17. <u>ஒற்றுப்பிழை நீக்குதல் என்றால் என்ன? சான்றுடன் விளக்குக?</u>**

- **எழுதும்போது ஒற்றுப்பிழை ஏற்படாமல் இருக்க வல்லினம் மிகும் இடங்களையும் மிகா இடங்களையும் அறிந்து கொள்வது இன்றியமையாதது ஆகும்.**
- **இரண்டு சொற்கள் தொடர்ந்து வரும் போது, இடையில் வல்லின மெய்களும் மெல்லின மெய்களும் மிகும்.**
- **இரண்டாம் சொல்லின் முதல் எழுத்து வல்லின உயிர்மெய்யாக இருக்கும் போதுதான் வல்லினம் மிகும்.**
- **க், ச், ட், த், ப், ற் ஆகியன வல்லின மெய்கள். இவற்றுள் க், ச், த், ப் என்னும் நான்கு மெய்களே பன்னிரண்டு உயிர் எழுத்துகளோடும் சேர்ந்து மொழி முதலில் வரும்.**
- **இரண்டு சொற்களை இணைத்து சொற்றொடர் அமைக்கும் போது தேவையற்ற இடத்தில் வல்லினமெய் எழுத்தைச் சேர்த்து எழுதினாலும் தேவையான இடத்தில் வல்லின மெய் எழுத்தைச் சேர்த்து எழுதாமல் விட்டாலும் ஒற்றுப்பிழை ஏற்படும்.**

  **<u>சான்று:</u>**

  **தந்த பலகை**

  **தந்தப் பலகை**

  **இதில் முதல் தொடர் (ஒருவர்) 'அளித்த பலகை' என்னும் பொருளையும், இரண்டாம் தொடர் (யானைத்) 'தந்தத்தால் ஆன பலகை' எனும் பொருளையும் கொண்டுள்ளன.**

  **ஒரு தொடரின் பொருளையே ஒற்று இடம் பெற்று மாற்றி விடுகின்ற நிலையினை இச்சான்று விளக்குகின்றது.**

**18. <u>வல்லினம் மிகும் இடம் என்றால் என்ன? சான்று தந்து விள்குக.</u>**

**(1) இயல்பாக உயிரை இறுதியாகக் கொண்டு நிற்கின்ற சொற்களின் முன் க், ச், த், ப் மிகும்.**

**சுட்டி + பையன் = சுட்டிப்பையன்**

**தட்டி + பார்த்தான் = தட்டிப்பார்த்தான்**

**(2) ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், ஈறுகெட்ட எதிர்மறை வினை எச்சம் முன் வல்லினம் மிகும்**

**உண்ணா + குதிரை = உண்ணாக்குதிரை**

**சொல்லா + பையன் = சொல்லாப்பையன்**

**உண்ணா + கிடந்தன = உண்ணாக்கிடந்தன**

செல்லா + கிடந்தன = செல்லாக் கிடந்தன

(3) அன்றி, இன்றி எனும் குறிப்பு வினையெச்சங்களின் முன் வல்லினம் மிகும்.

அன்றி + போகான் = அன்றிப்போகான்

இன்றி + செல்லான் = இன்றிச்செல்லான்

(4) குறிலும், நெடிலும் இணைந்து நிற்கும் சொற்களின் முன்வரும் வல்லினம் மிகும்.

பலா + கனி = பலாக்கனி

நிலா + கற்றை = நிலாக்கற்றை

(5) அகர ஈற்று வினையெச்சங்கள் அதாவது என, ஆக, விடஎன்னும் உயிரெழுத்து முன் வல்லினம் மிகும்.

உண்டென + சொன்னான் = உண்டெனச் சொன்னான்

வருவதாக + கூறினான் = வருவதாகக் கூறினான்

இராமனைவிட + பெரியவன் = இராமனைவிடப் பெரியவன்

(6) அ, இ, உ எனும் சுட்டெழுத்துளின் முன்னும், எ எனும் வினா எழுத்தும் முன்னும் வல்லினம் மிகும்.

சுட்டு: அ + குடிகை = அக்குடிகை

இ + சங்கு = இச்சங்கு

உ + பக்கம் = உப்பக்கம்

வினா: எ + தட்டு = எத்தட்டு

(7) இந்த, அந்த, இங்கு, அங்கு, ஆண்டு, ஈண்டு, இப்படி, அப்படி என்னும் சுட்டுச் சொற்கள், எந்த, எங்கு, எப்படி என்ற வினாச் சொற்கள் ஆகியவற்றின் முன் வரும் வல்லினம் மிகும்.

சுட்டு: இந்த + தெரு = இந்தத்தெரு

அந்த + பக்கம் = அந்தப்பக்கம்

இங்கு + கண்டேன் = இங்குக் கண்டேன்

அங்கு + சென்றேன் = அங்குச் சென்றேன்

ஆண்டு + படித்தான் = ஆண்டுப் படித்தான்

ஈண்டு + தந்தான் = ஈண்டுப்தந்தான்

இப்படி + சொன்னான் = இப்படிச் சொன்னான்

அப்படி + பார்த்தான் = அப்படிப் பார்த்தான்

வினா: எந்த + செடி = எந்தச்செடி?

எங்கு + போனாய் = எங்குப் போனாய்?

எப்படி + பிடித்தாள் = எப்படிப் பிடித்தாய்

(8) இரண்டாம் வேற்றுமை விரி நான்காம் வேற்றுமை விரி - இவற்றைத் தொடர்ந்து வரும் வல்லினம் மிகும்.

2 - ஆம் வேற்றுமை விரி : வாளை + தடுத்தான் = வாளைத்தடுத்தான்

4 - ஆம் வேற்றுமை விரி : கந்தனுக்கு + பிடித்தது = கந்தனுக்குப் பிடித்தது

(9) இரண்டாம், மூன்றாம், நான் காம், ஐந்தாம் வேற்றுமை - உருபும் பயனும் உடன் தொடக்க தொகையின் பின்வரும் வல்லினம் மிகும்.

நீர் + குடம் = நீர்க்குடம் (நீரை உடைய குடம்)

துணி + பை = துணிப்பை (துணியினால் ஆன பை)

கோழி + தீவனம் = கோழித்தீவனம் (கோழிக்கு உரிய தீவனம்)
விழி + புனல் = விழிப்புனல் (விழியின் நீங்கிய புனல்)

(10) ஆறாம், ஏழாம் வேற்றுமைத் தொகைகளின் பின்வரும் வல்லினம் மிகும்.

குருவி + கூடு = குருவிக்கூடு (குருவியது கூடு)
நரி + பல் = நரிப்பல் (நரியினது பல்)
ஊர் + பெண்டிர் - ஊர்ப் பெண்டிர் (ஊரின் கண்ணுள்ள பெண்டிர்)
மலை + குகை - மலைக்குகை (மலையின் கண்ணுள்ள குகை)

(11) பண்புத்தொகை, இருபெயரொட்டுப் பண்புத்தொகை, உவமைத் தொகை இவற்றைத் தொடர்ந்து வரும் வல்லினம் மிகும்.

பண்புத்தொகை:

தீமை + திங்கள் = ஆடித்திங்கள்
பொய் + சான்று = பொய்ச்சான்று

இருபெயரொட்டுப் பண்புத்தொகை:

ஆடி + திங்கள் = ஆடித்திங்கள்
உழவு + தொழில் = உழவுத்தொழில்

(12) நெடில் தொடர்க்குற்றியலுகரம், உயிர்த்தொடர்க் குற்றியலுகரம், வன்தொடர் முற்றியலுகரம் - இவற்றின் பின்வரும் வல்லினம் மிகும்.

நெடில் தொடர்:

ஏடு + படிப்பு = ஏட்டுப்படிப்பு
காடு + செடி = காட்டுச்செடி

உயிர்த்தொடர்:

கயிறு + திரி = கயிற்றுத்திரி
வயிறு + பாடு = வயிற்றுப்பாடு

வன்தொடர்:

காப்பு + செய்யுள் = காப்புச்செய்யுள்
வாக்கு + தா = வாக்குத்தா

முற்றியலுகரம்:

நடு + தெரு = நடுத்தெரு
புது + கோட்டை = புதுக்கோட்டை
பொது + திடல் = பொதுத்திடல்

(13) ஓரெழுத்து ஒரு மொழியின் முன் வல்லினம் மிகும்

கை + பிள்ளை = கைப்பிள்ளை
தீ + பொறி = தீப்பொறி
பூ + தொட்டி = பூத்தொட்டி

(14) சில இடை, உரிச்சொற்களின் முன் வல்லினம் மிகும்

இனி + செல்வோம் = இனிச்செல்வோம்
சால + சிறந்தது = சாலச்சிறந்தது
தவ + கோலம் = தவக்கோலம்

19. <u>வல்லினம் மிகா இடங்கள்</u>

1) சில, பல, கெட்ட, நல்ல எனும் சொற்களின் முன் வல்லினம் மிகாது.

சில + பறவை = சில பறவை
பல + பாடம் = பல பாடம்
நல்ல + பிள்ளை = நல்ல பிள்ளை

2) பெயரெச்சத்தின் முன்வரும் வல்லினம் மிகாது.
அரிய + செல்வம் = அரிய செல்வம்
புதிய + படைப்பு = புதிய படைப்பு

3) எழுவாய்த் தொடர், விளித்தொடர்களின் முன்வரும் வல்லினம் மிகாது.
யானை + பெரியது = யானை பெரியது (எழுவாய்)
தம்பீ + போ = தம்பீபோ (விளி)

4) வினாச் சொற்களின் முன்வரும் வல்லினம் மிகாது.
நீயா + செய்தாய் = நீயா செய்தாய் (ஆ)
அவனோ + கண்டான் = அவனோ கண்டான் (ஓ)

5) படி என முடியும் சொற்களின் முன்வரும் வல்லினம் மிகாது.
கேட்கும்படி + சொன்னார் = கேட்கும்படி சொன்னார்
தரும்படி + கேட்டான் = தரும்படி கேட்டான்.

6) உகர ஈற்று வினையெச்சத்தின் முன்வரும் வல்லினம் மிகாது
அறிந்து + சென்றான் = அறிந்து சென்றான்
உணர்ந்து + கொண்டான் = உணர்ந்து கொண்டான்
வந்து + சேர்ந்தன = வந்து சோந்தன

7) இத்தனை, அத்தனை, எத்தனை எனும் சொற்களின் முன் வரும் வல்லினம் மிகாது
இத்தனை + பழங்கள் = இத்தனை பழங்கள்
அத்தனை + பூக்கள் = அத்தனை பூக்கள்
எத்தனை + செடிகள் = எத்தனை செடிகள்

8) வினைத் தொகையில் வல்லினம் மிகாது
அணி + கலன் = அணிகலன்
தொடர் + கதை = தொடர்கதை
வளர் + பிறை = வளர்பிறை

9) எட்டு, பத்து தவிர்த்து பிற எண்களின் முன் வல்லினம் மிகாது.
இரண்டு + கண்கள் = இரண்டு கண்கள்
மூன்று + கைகள் = மூன்று கைகள்
நான்கு + தேர் = நான்கு தேர்
ஐந்து + குதிரைகள் = ஐந்து குதிரைகள்
ஆறு + தொட்டி = ஆறு தொட்டி
ஏழு + தோப்புகள் = ஏழு தோப்புகள்
ஒன்பது + பேர்கள் = ஒன்பது பேர்கள்

10) அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி ஆகியவற்றில் வல்லினம் மிகாது.
தீ + தீ = தீதீ
மள + மள + மளமள

11) வியங்கோள் வினைமுற்றைத் தொடர்ந்து வரும் வல்லினம் மிகாது
ஓங்குக + புகழ் = ஓங்குகபுகழ்

வாழிய + தமிழர் = வாழிய தமிழர்

12) இரு வடசொற்கள் இணையும்போது வல்லினம் மிகாது.
புஷ்ப + தேர் = புஷ்பதேர்

13) ஆறாம் வேற்றுமை தொகையில் சில இடங்களில் வல்லினம் மிகாது.
கம்பர் + செல்வாக்கு = கம்பர் செல்வாக்கு

14) சில வினையெச்ச வினைமுற்றுத் தொடர்களின் முன் வல்லினம் மிகாது.
வந்து + சேர்ந்தன = வந்து சேர்ந்தன (வினையெச்சம்)
கண்டாய் + கனவு = கண்டாய் கனவு (வினைமுற்று)

15) உயிர்த்தொடர், இடைத்தொடர், ஆய்தத்தொடர், முற்றியலுகரம் ஆகியவற்றின் முன் வல்லினம் மிகாது.
உறவு + காத்தனர் = உறவு காத்தனர் (உயிர்த்தொடர்)
எஃகு + கதவு = எஃகு கதவு (ஆய்தத்தொடர்)
சுடு + தீ = சுடுதீ (முற்றியலுகரம்)

20. <u>சுப்புக்குட்டியின் குடும்பம் பற்றி கூறுக.</u>
- சுப்புக்குட்டி வீட்டில் மூத்தவர். உடன் பிறந்தவர்கள் நால்வராவர். அதில் இரண்டு பேர் வெளியூரில் உத்தியோகம் பார்கின்றனர்.
- சுப்புக் குட்டியும் கடைசித் தம்பி இராமலிங்கமும் மட்டுமே ஊரில் இருக்கிறார்கள்.
- எல்லாருக்கும் சேர்ந்து சுப்புக்குட்டி பனைகளைப் பார்த்துக் கொள்கிறார்.
- எல்லாருக்கும் பங்கு உண்டு என்ற போதிலும் உள்ளூரில் இருப்பவர் என்பதால் கூடுதல் உரிமை கொண்டாடுவார் சுப்புக்குட்டி.

21. <u>இராயப்பனிடம் இளைஞர்கள் என்ன கேட்டனர்?</u>
- சுப்புக்குட்டியின் மகன் சுரேஷ் தன் நண்பர்களுடன் பனைக் கூட்டத்திற்கு வந்தான். இராயப்பனிடம் பதனீர் கேட்டு வாங்கி குடித்தனர்.
- சுரேஷ் உடன் வந்த இளைஞர்கள் இனிப்பு பதனி மட்டுமே குடிக்கீறீங்க. தனிப்பதனி இறக்கித் தரச் சொல்லி ராயப்பனிடம் கேட்டனர்.
- சுண்ணாம்பு தடவாமல் இறக்கும் பதனி கொஞ்சம் தாண்டுனா அது கள்ளு. இது நமக்கு சரிபட்டு வராது என ராயப்பன் இளைஞர்களிடம் கோபமாக கூறினான்.

22. <u>ராயப்பனின் வீடு எவ்வாறு அமைக்கப்பட்டு இருந்தது.</u>
- ராயப்பனின் குடிசை பனை ஓலைகளால் வேயப்பட்டது. இது அவருடைய தற்காலிக வீடு.
- சுற்றிலும் ஓலைகளை வைத்து சுவர் போல மாற்றியிருந்தார். குடிசையை ஒட்டி சிறு சாய்ப்பு இறக்கி அங்கு சமையல் செய்தனர்.
- நாலு பெரிய பனங்காப்புகள் ஊன்றி அகலமாய் எழுப்பப்பட்ட கொட்டம் இருந்தது. அதில் நடுவில் பதனீர் காய்ச்சும் பெரிய அடுப்பு அமைத்திருந்தனர்.
- பதனீர் முழுவதும் சேகரித்த பின் இக் கொட்டத்திலேயே கருப்பட்டி காய்ச்சுவர். இவ்வாறு பனைக் கூட்டத்துக்கு நடுவே ராயப்பனின் வீடு அமைந்திருந்தது.

23. <u>ராயப்பனிடம் சுப்புக்குட்டி போட்ட நிபந்தனை என்ன?</u>

- சுரேசுக்கு ராயப்பன் குடிக்க கள்ளு இறக்கி தரவில்லை. இதை சுரேஷ் தன் அப்பா சுப்புக் குட்டியிடம் கூறினான்.
- தன் மகன் மீது உள்ள பாசத்தால் சுப்புக்குட்டி ராயப்பனிடம் சுரேசுக்கும் அவன் நண்பர்களுக்கும் தனிப் பதனி இறக்கித் தர கட்டளையிட்டான்.
- ஆனால் இராயப்பன் இத் தவறான செயலை நான் செய்ய மாட்டேன் எனப் பிடிவாதமாக மறுத்தான்.
- உடனே சுப்புக்குட்டிக்கு கோபம் வந்தது. இது எங்க பனை, எங்க புஞ்சை நான் கேக்கறது நீ செய்யனும் என்றார்.
- நீ இதைச் செய்யவில்லை என்றால் வேறு ஆளை மாற்ற வேண்டிவரும் என நிபந்தனைக் கூறிச் சென்றான்.

24. <u>ராயப்பனின் மனச் சிக்கலை அவரின் மனைவி எவ்வாறு தீர்த்தாள்?</u>

- ராயப்பனிடம் சுப்புக்குட்டி பேசியதைக் கேட்ட அவரின் மனைவிலூர்து மேரி திடமாக ஒரு முடிவு எடுத்தாள்.
- தன் கணவனை நோக்கி இதுவரை யாரும் குறை சொல்லாத பொழப்பு பொழச்சாச்சு. ஓம் மன நலையை யாருக்காகவும் மாற்ற வேண்டாம்.
- உடம்பில் வலிமை இருக்கு, அருவாளும் மட்டக் கம்பும் இருக்கு. எங்கே போனாலும் பொழச்சுக்கலாம்.
- மனசை போட்டுக் குழப்பாதீங்க. தைரியமாக இருங்க என ராயப்பனின் மனச் சிக்கலைத் தீர்த்தாள்.

25. <u>வளையாத பனையில் இராயப்பனின் பண்புகளை விவரிக்க.</u>

➢ இராயப்பன் பனை ஏறும் தொழிலாளி. சிறு வயதில் இருந்தே ஏறி வருகிறார். ஓவுல் ரெட்டியார் மகன் சுப்புக்குட்டிக்கு பாத்தியப்பட்ட புஞ்சை இது. இதில் 250 பனைகளுக்கு மேல் இருக்கும்.

<u>*பனை ஏறும் தொழில்:*</u>

♣ இராயப்பன் சிறுவயதிலிருந்தே பனை ஏறும் தொழில் செய்பவன். இவன் நாடாறுமாதம் காடாறு மாதம் என்பது போல் பதனீர் சமயத்தில் தோப்பிலும் மற்ற வெள்ளாமைக் காலத்தில் ஊரிலுமாக வாழ்ந்து வருபவன்.

♣ ராயப்பனின் மனைவி அவனுக்கு துணையாக பனைவெல்லம் காய்ச்சும் பனியில் ஈடுபட்டு வந்தாள்.

<u>*இராயப்பனின் பண்பு:*</u>

♣ இராயப்பன் யாரிடமும் சண்டையிட மாட்டான். சுப்புக்குட்டியின் மகன் சுரேஷ் தன் நண்பர்களுடன் வந்து பதனீர் குடித்து விட்டு செல்வான்.

♣ சுரேஷ் ராயப்பனை நோக்கி, ‘நல்ல பனையாய் பார்த்து ஏறும்’ எனக் கேலியாகப் பேசுவான். ஆனால் இராயப்பனுக்கு கோபமே வராது. ஒருமுறை சுரேஷ் தனிப்பதனீர் கேட்டு பிடிவாதம் பிடித்தான்.

♣ ‘நாங்களும் தனிப் பதனீர் கேட்டு உம்மட்ட தொங்கோ தொங்கறோம் அத காதிலே போட்டுக்க மாட்டீரு. எல்லாம் எங்க பனைக. இதிலே உமக்கு என்ன கஷ்டம் எனக் கேட்டான்’.

- இராயப்பன், இதுவரைக்கும் இந்தக் காட்டிலே எந்த பனையிலேயும் தனிப் பதனிக்கு கலயம் கட்டியதில்லை. என் தொழிலுக்கு நான் துரோகம் செய்ய மாட்டேன் எனக் கூறிவிட்டான்.
- ஆனால் இராயப்பன், இதுவரைக்கும் இந்தக் காட்டிலே எந்த பனையிலேயும் தனிப் பதனிக்கு கலயம் கட்டியதில்லை. என் தொழிலுக்கு நான் துரோகம் செய்ய மாட்டேன் எனக் கூறிவிட்டான்.

*<u>மனதிடம்:</u>*

- சுரேஷ் தனக்கு இராயப்பன் தனிப்பதநீர் குடுக்க மறுத்ததை தன் தந்தை சுப்புக்குட்டியிடம் கூறினான். சுப்புகுட்டி வந்து இராயப்பனிடம் தனிப்பதனீர் குடுக்காவிடில் நீ வேறு காட்டிற்கு சென்று விடு என மிரட்டினார்.
- அப்போது கூட இராயப்பன் தன் நிலையில் இருந்து மாறாமல் தனிப்பதநீர் இறக்கித் தர முடியாது எனமனத்திடத்துடன் சொன்னான்.
- இராயப்பன் தன் தொழிலில் தனக்கென வாழ்ந்து வந்த தர்மத்தை யாருக்காகவும் விட்டுக் கொடுக்காம வளையாத பனை போல மனோதிடம் கொண்டவனாக வாழ்ந்து வந்தான்.

26. <u>ராயப்பனிடம் சுப்புக்குட்டி செய்த விவாதம் குறித்து எழுதுக.</u>

- சுப்புகுட்டி தன் புஞ்சையில் வேலை பார்க்கும் இராயப்பன் தன் மகனுக்கு தனிப்பதனீர் தராததைக் கேட்டு கோபம் கொண்டு இராயப்பனை பார்க்கச் சென்றான்.
- புஞ்சையில் இராயப்பனிடம் சுப்புக்குட்டி, 'ராயப்பன் இன்னும் பழைய உலகத்திலேயே இருக்க. இந்தக் காலத்துப் பசங்க எல்லாத்தையும் தெரிஞ்சவங்க. ஒரு பத்து நாள் லீவில் இருப்பான் அவன் ஆசைப்பட்டது போல ஒரு பனையிலே மட்டும் போட வேண்டியது தானே, அதைக் கொஞ்சம் இறக்கிக் கொடுப்பா, எனக் கேட்டான்.
- இராயப்பன், அது பதநீர் இல்ல கள்ளு, அத எப்படி நான் இறக்க முடியும். இதுவரைக்கும் போலிஸ் ஸ்டேஷன் வாசலைப் பார்த்தது இல்லை. இது தப்பில்லையா எனப் பணிவாய்க் கேட்டான்.
- ஐயா, இதுவரைக்கும் நான் இந்த வேலை பார்த்தது இல்லை. இனிமேலும் பார்க்க முடியாது. தயவு செய்து பிள்ளைகளுக்கு மோசமான வழியைக் காட்டாதீங்க எனக் கெஞ்சினான்.
- சுப்புக்குட்டி இராயப்பன் கூறியதை கேட்கவில்லை. 'இங்க பாரு இது என் புஞ்சை கவர்மெண்டில் தயாரிச்சு விக்கறாங்க அதை ஊர் சனம் பூரா குடிக்குது. பசங்க ஆசைப் படுறாங்க முரண்டு பிடிக்காத என கோபமாக பேசினார்.
- இராயப்பனுக்கு தர்ம சங்கடமாக இருந்தது. ஐயா, அது போதை இங்க குடிக்க வருவாங்க. இங்க சமஞ்ச குமரிக இருக்கு பொம்பளைப் பிள்ளைக புழங்கற இடம்.
- இங்க வந்து குடிச்சிட்டு போதையில பிரச்சினை எதுவும் ஆகிவிடும். பிறகு பொல்லாப்பு வந்து விடும். பெரியவுக நீங்க தான் எடுத்துச் சொல்லனும் என்றான் இராயப்பன்.
- சுப்புகுட்டி, ஒரு பேச்சுக்கு சொல்றேன் நான் ஆள மாத்திவிட்டா உன்னால என்ன செய்ய முடியும் எனக் கூறிவிட்டு சென்றார். இவ்வாறாக சுப்புக்குட்டிக்கும் இராயப்பனுக்கும் விவாதம் நடந்தது.

**27. சிறு இசை கதையின் நாயகி மூக்கம்மா ஆச்சியின் பாத்திரப் படைப்பை விவரி.**

**முன்னுரை:**

'சிறு இசை' என்ற சிறுகதையை எழுதியவர் வண்ணதாசன் இவர் திருநெல்வேலியில் பிறந்தவர். தமிழறிஞரும் சாகித்திய அகாதமி விருதும் பெற்ற தி.க. சிவசங்கரனின் மகனாவார். நவீன தமிழ்ச் சிறுகதை உலகில் மிகுந்த கவனம் பெற்ற எழுத்தாளராக விளங்குபவர். ஒரு சிறு இசை என்ற சிறுகதை நூலுக்காக சாகித்திய அகாதெமி விருது பெற்றவர்.

***மூக்கம்மா ஆச்சி:***

- மூக்கம்மா ஆச்சிக்கு பதினாறு வயது முடியும் முன்னமே திருமணம் ஆகிவிட்டது. திருமணம் முடிந்த ஒரு மாதத்தில் கணவன் இறந்து போய்விட்டார். மூக்கம்மா ஆச்சிக்கு கதை சொல்வது மிகவும் பிடிக்கும். இருட்டுக்கும் அவருடைய கதைகளுக்கும் ஒரு நெருக்கம் இருந்து கொண்டே இருக்கும். பகலில் அவள் கதை சொன்னதே இல்லை.
- சாயுங்காலம் அவளைக் கதை சொல்லச் சொன்னால் கருகருத்த நேரத்தில் கதை சொல்லக் கூடாது 'ராட்ஸசன் பிடிப்பான்' எனக் கூறுவார். அவரிடம் பல ராஜா கதைகள் பல உண்டு.
- எந்நேரமும் அவர்கள் குதிரையில் வேட்டையாடிக் கொண்டே இருப்பார்கள். ராஜாக்கள் ஏழு பெண்ணை திருமணம் செய்து கொண்டனர் என தன் கற்பனைக் கேற்ப புராணக் கதைகளையும் ராஜா கதையினையும் இணைத்து கதை சொல்லும் பாங்கு ரசிக்க தக்கதாய் இருக்கும்.

***ஆச்சியின் யானை கதை:***

- ஒரு நாள் இரவு ஆடிச் செவ்வாய் அவ்வையார் விரதக் கொழுக்கட்டை செய்துவைத்து இருந்தாள். அக்கொழுக்கட்டை வாசம் பிடித்து ஒரு கொம்பன் யானை வந்தது. பாட்டி ஆண்களுக்கு கொழுக்கட்டை கொடுக்கக் கூடாதேன்னு யானையிடம் பொய் கூறினாள்.
- கொழுக்கட்டை எல்லாம் தீர்ந்து போய்விட்டது என சத்தியம் செய்தார்.யானையும் சத்தியத்துக்கு கட்டுப்பட்டு திரும்பி சென்று விட்டது.
- மறுநாள் காலையில் எழுந்திருச்சு பார்த்தா பாட்டிக்கு ஒரு பல்லு கூட இல்லாம உதிர்ந்து விட்டதாக பாட்டி கூறினாள். யானைகிட்ட பொய் சொன்னதால் தான் பல் எல்லாம் விழுந்து விட்டதாக சிரிக்காமல் நம்பும் படியாக கதை சொல்லுவதில் மூக்கம்மா ஆச்சி தேர்ச்சி பெற்றவள்.

***மூக்கம்மா ஆச்சியின் வேலை செய்யும் திறன்.***

- மூக்கம்மா ஆச்சி அவர் மகள் வீட்டுக்கு வரும் போதெல்லாம் ஏதாவது ஒரு வேலையை இழுத்து போட்டுக் கொண்டு செய்வாள். பத்து பக்கா பச்சரிசியையும் ஒரே ஆளாக இடித்து வைப்பாள்.
- எத்தனை கோட்டை நெல்லையும் ஒரு ஆளாக வெந்து தட்டுவாள். ஊரில் இருந்து கொண்டு வந்த காணத்தை மண் சட்டியில் மணம் வரும் வரை வறுத்து வைப்பாள். பரணில் இருக்கும் வெங்கலப் பாத்திரங்களை எல்லாம் வாய்க்காலுக்கு கொண்டு போய் விலக்கி எடுத்து வைப்பாள். புளிச்சிப்பத்தை ஓலைப் பாயில் காய வைத்து கொட்டை எடுப்பாள். இவ்வாறு ஆச்சி ஓயாது வேலைகள் பார்த்துக் கொண்டே இருப்பாள்.

***ஆச்சியின் மரணம்:***

- மூக்கம்மா ஆச்சி சிறுவயதிலேயே கணவனை இழந்தாலும் வாழ்க்கையில் தனக்கென ஒரு பிடிப்பினை வைத்துக் கொண்டார். அவர் மனத்தில் உள்ளே ஆழத்தில் ஒரு பெண்ணாக அவள் அனுபவிக்காத வாழ்க்கையின் ஏக்கம் இருந்து கொண்டே இருந்தது.
- அக்கவலையை அவள் தன் கதை கூறும் பாங்கின் மூலம் சிறிதளவு தீர்த்துக் கொண்டாள். தன் தங்கை பேத்திகளோடு உரையாடுவதிலும் வேலைகள் செய்வதிலும் தன் வாழ்க்கையை பூரணமாக்கி கொண்டவள்.
- அவள் இறந்தபின் அவள் பெட்டியைத் திறந்தபோது அதில், சொத்து பத்திரங்கள், சில பட்டுச் சேலைகள், பட்டு நேரியல், ஆச்சியின் புகைப்படம், தாத்தா பயன்படுத்திய மூன்று தங்க பொத்தான்கள் மற்றும் தாத்தாவின் சந்தனக்கலர் சட்டையும் இருந்தது. இவற்றிலிருந்து அவள் வாழ்வின் ஏக்கங்கள் ஒரு சிறு இசையாய் வெளி வந்தன.

**முடிவுரை:**

ஒரு பெண் சிறுவயதிலேயே தன்வாழ்க்கையை தொலைத்து விடுகிறாள். ஆனால் அவள் முதுமை வரை அவள்வாழ்க்கை தன் ஆசைகளை அடக்கிக் கொண்டு வாழ்கிறாள். யாருக்கும் தெரியாமல் அவளுக்குள்ளும் ஒரு இசை போல் மெல்லிய தாய் ஆசைகளும் ஏக்கங்களும் மறைந்து இருப்பதை இச்சிறுகதையின் மூலம் ஆசிரியர் உண்ர்த்துகிறார்.

---

## தன் விவரக் குறிப்பு தயாரித்தல்

| | | |
|---|---|---|
| பெயர் | : | (மாணவரின் பெயர்) |
| வயது | : | 31. |
| பிறந்த தேதி | : | 10.06.1987 |
| பாலினம் | : | ஆண் |
| தேசிய இனம் | : | இந்தியன் |
| திருமணம் | : | மணம் முடிக்கவில்லை |
| முகவரி | : | 10, வடக்கு வீதி, மதுரை. |
| கல்வித் தகுதி | : | ஆய்வியல் அறிஞர். |
| கல்வி நிறுவனம் | : | திருவள்ளுவர் பல்கலைக்கழகம். |
| பாடம் தேர்ச்சி | : | தமிழ். |
| ஆண்டு | : | 2013. |
| வகுப்பு | : | முதல் வகுப்பு. |
| கூடுதல் தகுதி | : | தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் சரளம்.<br>கணினிப் பயிற்சி. |
| முன் அனுபவம் | : | 5 ஆண்டுகள் தமிழ் ஆய்வு,<br>உலகத் தமிழாய்வு நிறுவனம், சென்னை. |
| பரிசுகள் / சான்றிதழ் | : | சிறந்த ஆய்வாளர் சான்றிதழ். |
| பார்வை | : | |

(மாணவரின் கையொப்பம்)

**கையொப்பம்**